

# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ் 49

துன்முகி - ஆடி - 2016 - ஜுலை

01.07.2016 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி முதலாம் ஆண்டுப் பட்ட வகுப்புகள் தொடக்க விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

துன்முகி - ஆடி - 2016 - ஜுலை     இதழ் - 49



வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ்     ரூ 10.00
ஆண்டுச் சந்தா     ரூ 100.00




உ
சிவமயம்

# இறை வணக்கம்

பச்சைவண்ண மாலுக்குப் பின்பிறந்த பங்கயத்தைப்
பரமனுக்குத் தாரமெனும் பாவை யாளைப்
பைரவியைச் சங்கரியைப் பார்வதியை உமையவளைப்
பார்க்கவியை பரமசிவன் பார்த்துப் பார்த்தே

இச்சைகொள வைப்பவளை இமயமலைப் பூங்கொடியை
ஏழ்பிறப்பும் துணைநிற்கும் இனிய தாயை
எம்பெருமான் சிவனோடு போட்டிநடம் பயின்றவளை
ஈரடியாம் தாமரையை எமக்குக் காட்டி

அச்சமுறச் சமணர்களை அணிமதுரைப் பதியினிலே
அன்றுதிரு நீற்றாலே அயர வைத்த
அருட்காழிச் சண்பையர்கோன் ஞானப்பால் உண்ணவைத்த
அன்புடைய திருநெல்லை அம்மை யாளை

மச்சமுதல் மீனினங்கள் மகிழ்ந்துமது நதியாடி
மகிழ்கின்ற திருத்தலமாம் சமிவ னத்தை
மன்பதையில் நண்ணிவரும் மாதவர்க்கே அருள்புரியும்
மாதரசி அடிவணங்கி மகிழு வோமே

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# மடாலய நிகழ்வுகள்

20.05.2016 அன்று கொத்தமங்கலம் ஸ்ரீ அருணாசல சுவாமிகளின் குருபூசையும், 21.05.2016 அன்று ஸ்ரீமத் திருக்களர் ஆண்டவரின் குருபூசையும், 27.05.2016 அன்று அண்ணாமலை ஞான தேசிகர் (6வது பட்டம்) அவர்களின் குருபூசையும், 13.06.2016 அன்று கோட்டையூர் ஸ்ரீ சொக்கப்ப ஐயா குருபூசையும், 18.06.2016 அன்று ஸ்ரீமத் ராமநாத ஞான தேசிகரின் குருபூசையும், 29.06.2016 அன்று திருக்களர் கிருஷ்ண சாமிகளின் குருபூசையும், 02.07.2016 அன்று சின்னத்துறவு சுவாமிகள் மற்றும் ஸ்ரீமத் காசி விஸ்வநாத சுவாமிகளின் குருபூசையும், 11.07.2016 அன்று ஸ்ரீமத் மகாதேவ ஞான தேசிகர் மற்றும், பள்ளத்தூர் பெரிச்சியப்ப அய்யாவின் குருபூசையும், 14.07.2016 அன்று ஸ்ரீ சபாபதி சுவாமிகளின் குருபூசையும் நடைபெற்றன.

01.07.2016 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி முதலாண்டுப் பட்டப்படிப்பு வகுப்புகள் தொடக்க விழா நடைபெற்றது. சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகளின் ஆசியுடன் கல்லூரி முதல்வர் டாக்டர் பா. செல்லப்பா தலைமையில் நடைபெற்ற விழாவில் நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரி முதல்வர் திரு. மாயாண்டி, மடாலய மேலாளர் திரு. அழகப்பன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

பேராசிரியை திருமதி கே. கலா முதலாண்டு மாணவர்களையும் அவர் தம் பெற்றோர்களையும் வரவேற்றுப் பேசினார். பேராசிரியை திருமதி. சீதாலெட்சுமி நன்றியுரை கூறினார்.

# திருக்குறள் - பாயிரம்

(ம. கார்மேகம்)

## கடவுள் வாழ்த்து

**1. அகரம் முதல எழுத்து எல்லாம் ஆதி**
**பகவன் முதற்றே உலகு.**

அகரம் - அ என்னும் ஒலி; முதல - முதன்மையாகக் கொண்டன; எழுத்து எல்லாம் - எழுத்துக்களாகிய ஒலிகள் எல்லாம்; உலகு - இந்த உலகத்து உயிர்கள்; ஆதிபகவன் - முதலாக அமைந்த இறைவன்; முதற்றே - முதலாகக் கொண்டது.

மொழியின் எழுத்துக்களாகிய ஒலிகள் எல்லாம் அகரம் என்னும் ஒலியை முதலாகக் கொண்டே இயங்குகின்றன. அது போல் உலகத்து உயிர்கள் எல்லாம் முதன்மையான கடவுளையே முதலாகக் கொண்டு இயங்குகின்றன.

முதற் கடவுளின் உண்மையை இக்குறள் உணர்த்துகிறது.

(கரம் - சாரியை) - உலகு - ஆகுபெயர் - ஏ காரம் தேற்றே காரம்.

**2. கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்**
**நற்றாள் தொழாஅர் எனின்**

கற்றதனால் - கல்வி கற்றதனால், ஆய - உண்டான ; பயன் என்கொல் - பயன் என்ன ?; வாலறிவன் - தூய அறிவினனாகிய இறைவன் ; நற்றாள் - நன்மை நிறைகின்ற தாள்; தொழாஅர் எனின் - வணங்கவில்லை என்றால் !

தூய அறிவனனாகிய இறைவனின் நன்மை நிறைகின்ற தாள்களை வணங்கவில்லை என்றால் கல்வி கற்றதனால் உண்டாகும் பயன் என்ன ?

கல்விகற்றதன் பயன் இறைவனை வணங்குதலே என்று இப்பாடலில் தெளிவுறுத்துகிறார்.

என் ? - வினா ; கொல் - அசைநிலை ; தொழாஅர் - இசைநிறை அளபெடை

**3. மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்**
**நிலமிசை நீடுவாழ் வார்.**

மலர்மிசை - மலரின்மீது ; ஏகினான் - பொருந்தி இருக்கும் இறைவன் ; மாணடி - பெருமை பொருந்திய அடியினை ; சேர்ந்தார் - நினைத்து வணங்கியவர்கள் ; நிலமிசை - இவ்வுலகில்; நீடுவாழ்வார் - நீண்ட நாள் வாழ்வார்கள்.

மனமாகிய மலரின்மீது பொருந்தி இருப்பவனாகிய இறைவனின் பெருமை பொருந்திய பாதங்களை (எண்ணி) நினைத்து வணங்கியவர்கள் இவ்வுலகில் நீண்டநாள் வாழ்வார்கள்.

ஏகினான் , சேர்ந்தார் - வினையாலணையும் பெயர்கள்.

**4. வேண்டுதல் வேண்டா(மை) இலானடி சேர்ந்தார்க்(கு)**
**யாண்டும் இடும்பை இல**

வேண்டுதல் - விரும்புதல்; வேண்டாமை - எதையும் விரும்பாதிருத்தல்; இலான் - இல்லாதவனாகிய இறைவன்; அடி - பாதங்கள்; சேர்ந்தார்க்கு - ; யாண்டும் - எப்பொழுதும் எவ்விடத்தும் ; இடும்பை - துன்பம்; இல - இல்லாதாகும்

விருப்பும் வெறுப்பும் இல்லாதவனாகிய இறைவனின் பாதங்களை நினைத்து வணங்கியவர்களுக்கு எப்பொழுதும் எவ்விடத்தும் துன்பம் என்பது இல்லையாகும்.

இலான் - இல்லான் என்பதன் இடைக்குறை.

**5. இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்**
**பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு**

இருள்சேர் - துன்பம் சேர்க்கின்ற ; இருவினையும் - நல்வினை , தீவினை என்ற இரண்டும் ; சேரா - சேரமாட்டா; இறைவன் - இறைவனுடைய ; பொருள்சேர் புகழ் - பொருள் நிறைந்த புகழ்ச் சொற்களை ; புரிந்தார் - எப்பொழுதும் சொல்பவர்கள் ; மாட்டு - இடத்தில்

பிறவித் துன்பமாகிய இருளைச் சேர்க்கின்ற நல்வினை தீவினை

என்ற இரண்டும் இறைவனது பொருள் நிறைந்த புகழ்ச் சொற்களை எப்பொழுதும் சொல்பவரிடத்தில் சேரமாட்டா.

இருள்சேர் - இரண்டாம் வேற்றுமைத் தொகை ; இருவினையும் - முற்றும்மை ; புகழ்புரிந்தார் - இரண்டாம் வேற்றுமைத் தொகை.

**6. பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க**
**நெறிநின்றார் நீடுவாழ் வார்.**

பொறிவாயில் - மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் பொறிகளாகிய வாயில்; ஐந்து - அந்தவாயில் வழியாக உணர்கின்ற ஐந்து புலன் உணர்வுகள்; அவித்தான் - நீக்கியவனாகிய இறைவன் ; பொய்தீர் - பொய்மை இல்லாத ; ஒழுக்க நெறி - மெய்யான ஒழுகலாறுகளில் நின்றவர்கள் ; நீடுவாழ்வார் - நீண்டநாள் வாழ்வார்.

ஐப்பொறிகளின் வழியாக உணர்கின்ற ஐம்புலன் உணர்வுகளையும் வென்றவனாகிய இறைவனுடைய பொய்யில்லாத நெறியின் கண் நின்று மெய்யான ஒழுகலாறுகளைக் கொண்டவர்கள் இப்புவியில் நீண்ட நாள் வாழ்வர்.

3, 4, 5, 6 ஆம் குறள்களில் இறைவனை வணங்குவார் எய்தும் பயன் கூறப்பெற்றது.

ஐந்தவித்தான் - இரண்டாம் வேற்றுமைத் தொகை; அவித்தான் - வினையால் அணையும் பெயர்; நெறிநின்றார் - ஏழாம் வேற்றுமைத் தொகை.

**7. தனக்குவமை இல்லாதான் தான்சேர்ந்தார்க் கல்லால்**
**மனக்கவலை மாற்றல் அரிது.**

தனக்குவமை இல்லாதான் - இறைவன் ; தாள்சேர்ந்தார்க்கு - பாதங்களை நினைப்பவர்க்கு; அல்லால் - அல்லாமல் ; மனக்கவலை - மனத்தின் கண் உள்ள கவலை ; மாற்றல் - மாற்றுதல் , போக்குதல்; அரிது - அரிய ஒன்றாகும்.

தனக்கென்று உவமை இல்லாதவனாகிய இறைவனின்

பாதங்களை நினைத்து வணங்குபவர்களின் மனக்கவலை மட்டுமே எளிதில் நீங்கும். வணங்காதாரின் மனக்கவலை நீக்க முடியாததாகும்.

தாள்சேர்ந்தார்க்கு - இரண்டாம் வேற்றுமைத் தொகை ; சேர்ந்தார்க்கு - வினையால் அணையும் பெயர் ; மனக்கவலை - ஏழாம் வேற்றுமைத் தொகை ; அரிது - குறிப்பு வினை முற்று ; மாற்றல் - தொழிற்பெயர்.

**8. அறஆழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்**
**பிறஆழி நீந்தல் அரிது.**

அறஆழி - அறமாகிய கடல்; அந்தணன் - இறைவன் ; அழகிய தண்மைமிக்கவன்; தாள் - பாதங்களை நினைப்பவர்க்கு; அல்லால் - அல்லாமல் ; பிறஆழி - அறம் தவிர்த்த பிறகடல்; நீந்தல் - கடத்தல் ; அரிது - அரியதாகும்.

அறக்கடலாகிய இறைவனின் பாதங்களை நினைப்பவர்க்கு மட்டுமே பிறதுன்பக் கடலைக் கடத்தல் எளிதாகும். மற்றவர்க்கு அரிதாகும்.

அறஆழி - உருவகம் ; அரிது - குறிப்பு வினைமுற்று.

**9. கோள்இல் பொறியில் குணமிலவே எண்குணத்தான்**
**தாளை வணங்காத் தலை.**

எண்குணத்தான் - எட்டுவகைக் குணங்களை உடைய இறைவனின் ; தாளை - பாதத்தை ; வணங்காத் தலை - வணங்காத தலைகள் ; கோள்இல் - கொள்கை இல்லாத ; பொறியில் - பொறிகளைப் போல ; குணமிலவே - பயன்பாடின்றிப் பண்பில்லாதவையாகும்.

கண், காது, மூக்கு, வாய், மெய் போன்ற பொறிகளின் செயல்படும் தன்மை இல்லை என்றால் அவற்றால் பயனில்லை ; அது போலத் தலை என்ற உறுப்பும் இறைவனை வணங்காவிடில் பயனற்றதாகும் என்ற உறுப்பும்

வணங்கா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் ; பொறியில் - இல் உவம உருபு. (ஐந்தாம் வேற்றுமை உருபு); இலவே - எதிர்மறைக் குறிப்பு வினைமுற்று.

எண்குணங்கள் ; தன்வயத்தன் ஆதல் ; தூய
உடம்பினன் ஆதல் ; இயற்கை உணர்வினன் ஆதல் ;
முற்றும் உணர்தல் ; பாசங்களின் நீங்குதல்;
பேரருள் உடைமை ; முடிவில்லாத ஆற்றல் உடைமை ;
வரம்பில் இன்பம் உடைமை

7, 8, 9 ஆகிய குறள்களில் இறைவனை நினைக்கவில்லை எனில் ஏற்படும் குற்றங்கள் கூறப்பெற்றுள்ளன.

**10. பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவன்அடி சேரா தார்.**

பிறவிப் பெருங்கடல் - பிறவியாகிய பெரிய கடல் ; நீந்துவர் - நீந்திக் கடப்பர் ; நீந்தார் - நீந்த மாட்டார்கள் ; இறைவனடி - இறைவனின் பாதங்களை ; சேராதார் - நினைக்காதவர்கள்.

இறைவனின் பாதங்களை நினைத்து வணங்குவோர் பிறவியாகிய கடலை நீந்திக் கடப்பார்கள் ; மற்றவர்கள், இறைவனடி வணங்காதவர்கள் பிறவிக்கடலை நீந்த முடியாது. இறைவனை நினைப்பவர் பிறவித் துன்பத்திலிருந்து விடுபடுவார்கள் என்பது குறிப்பு.

பெருங்கடல் - பண்புத் தொகை

## 2. வான்சிறப்பு

வான் சிறப்பு - மழையினது சிறப்பைக் கூறுதல்

**1. வான்நின்று உலகம் வழங்கி வருதலான்**
**தான் அமிழ்தம் என்றுணரற் பாற்று.**

வான்நின்று - வானிலிருந்து ; மழைநிலையாகப் பெய்து ; உலகம் - உலகத்து உயிர்களை ; வழங்கி - பயன்தந்து காத்து; வருதலான் - வருகின்றதால் ; தான் - அந்த மழை ; (உலகத்து உயிர்களுக்கு); அமிழ்தம் - சாவா மருந்து ; என்று உணரற் பாற்று - என்று உணர்தற்கு உரியது.

வானிலிருந்து விழும் மழை உலகத்து உயர்களை நிலையாகக்

காக்க வழங்கி வருவதனால் அந்த மழை சாவாமருந்தாகிய அமிழ்தம் என்று உணரத்தக்கது ஆகும்.

உலகம் - ஆகுபெயர்.

2. **துப்பார்க்குத் துப்பாய துப்புஆக்கித் துப்பார்க்குத்**
**துப்புஆய தூஉம் மழை**

துப்பார்க்கு - உண்பவர்களுக்கு ; துப்பாய - உணவாக உள்ளவற்றை ; துப்பு ஆக்கி - உணவாக்கி ; துப்பார்க்கு - உண்பவர்க்கு; துப்பு ஆய தூஉம் - உணவாக இருப்பதும்; மழை - மழையாகும்.

உணவை உண்பவர்களுக்கு நல்ல உணவாக உள்ளவற்றை உணவாக்கிக் கொடுப்பதும் ; அவ்வாறு உண்பார்க்குத் தானே உணவாக நிற்பதும் மழையாகும். எனவே, மழைநீரே உணவு ; மழைநீரே உணவை ஆக்கப் பயன்படுவது.

துப்பாய தூஉம் - இன்னிசை அளபெடை

3. **விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியன்உலகத்து**
**உள்நின்று உடற்றும் பசி.**

விண் - மழை ; நின்று பொய்ப்பின் - நிலையாகப் பெய்யாது பொய்த்துவிட்டால் ; விரிநீர் வியன் உலகத்துள் - பரந்துபட்ட நீரால் சூழப்பட்ட உலகத்தில்; நின்று - நிலையாக ; பசி உடற்றும் - வருத்தும் ; - பசியானது

விண்ணிலிருந்து பெய்கின்ற மழை நிலையாகப் பொய்யாது பொய்த்துவிட்டால் பரந்துபட்ட நீரால் சூழப்பட்ட உலகத்தில் உள்ள உயிர்களைப் பசியானது நிலைத்து நின்று வருத்தும்.

கடல்நீர் இருந்தும் பயனில்லை ; மழைநீரே மக்களை வாழ்விக்கும்.

விரிநீர் - வினைத்தொகை.

4. **ஏரின் உழாஅர் உழவர் புயல்என்னும்**
**வாரி வளங்குன்றிக் கால்.**

ஏரின் - ஏரால் ; உழாஅர் - உழுதலைச் செய்யமாட்டார்கள்; உழவர் - உழவர்கள் ; புயல் என்னும் - மழை என்று சொல்லப்படும்; வாரி - வருவாய் (செல்வம்); வளம்குன்றிக்கால் - (பயன்) மிகுதி குறைந்து விட்டால்.

மழை என்று சொல்லப்படும் இயற்கை வருவாயின் மிகுதி குறைந்துவிட்டால் ஏரால் உழுகின்ற உழவுத் தொழிலை உழவர்கள் செய்யமாட்டார்கள். அதனால் உணவுப் பொருள் வளம் குறைந்து விடும்.

ஏரின் - உருபு மயக்கம் ; உழாஅர் - இசைநிறை அளபெடை; குன்றிக்கால் - தொகுத்தல் விகாரம்.

**5. கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே**
**எடுப்பதூஉம் எல்லாம் மழை.**

கெடுப்பதூஉம் - பெய்யாமல் கெடுப்பதும் ; கெட்டார்க்கு - அதனால் துன்புற்ற மக்களுக்கு; சார்வாய் - துணையாக ; ஆங்கே - அவ்வாறே ; எடுப்பதூஉம் - பெய்து வாழவைப்பதும் ; எல்லாம் - எல்லாமும் ; மழை - மழைதான்.

வேண்டும் காலத்தில் பெய்யாமல் உலகத்து மக்களின் வாழ்வைக் கெடுப்பதும் மழைதான் ; அவ்வாறே அந்த மக்களின் வாழ்வுக் கெடுதலைப் போக்கி அவர்களுக்குத் துணையாகப் பெய்து, வாழவைப்பதும் மழைதான். அழிக்கவும், ஆக்கவும் ஆகிய எல்லாம் செய்ய வல்லது மழையாகும்.

மற்று - வினைமாற்றுச் சொல் ; கெடுப்பதூஉம், எடுப்பதூஉம் - இன்னிசை அளபெடை.

**6. விசும்பின் துளிவீழின் அல்லால் மற்றாங்கே**
**பசும்புல் தலைகாண் பரிது.**

விசும்பின் துளி - மழையின் துளி ; வீழின் அல்லால் - வீழா விட்டால்; ஆங்கே - அப்போதே ; பசும்புல் - பசுமை நிறம் கொண்ட புல்; தலைகாண்பரிது - தலையையும் காண முடியாது

மழைத்துளி வீழாவிட்டால் பசும்புல்லைக் கூடக் காணமுடியாது எனவே உலகில் எந்த உயிரும் தழைக்க முடியாது என்பது பொருள்.

மற்று - வினைமாற்று , விசும்பு - ஆகுபெயர்.

7. **நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி**
**தான்நல்காது ஆகி விடின்**

நெடுங்கடலும் - அளவிடற்கரிதாகிய நீண்டகடலும் ; தன்நீர்மை - தனது இயல்பு ; குன்றும் - குறைந்துவிடும்; தடிந்து - குறைந்து ; எழிலி - மேகம் ; தான்நல்காது - தான்பெய்யாமல் ; ஆகிவிடின் - ஆகிவிட்டால்.

மேகம் தான் பொழிகின்ற அளவிலிருந்து குறைந்து பெய்யாமல் விட்டுவிட்டால் அளவிடற்கரியதாகிய கடல்கூடத் தன் இயல்பாகிய நீர்ப்பரப்பு, நீரில் உள்ள வளம் ஆகிய வற்றால் குறைந்து போய்விடும்.

முதல் 7 குறட்பாக்கள் உலக வாழ்வுக்கு மழை நீயே காரணம் என்பதைக் கூறுகின்றன.

நீர்மை - பண்புப்பெயர் ; நெடுங்கடல் - பண்புத்தொகை ; நல்காது - எதிர்மறை வினைமுற்று

8. **சிறப்பொடு பூசனை செல்லாது வானம்**
**வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு**

வானம் - மழை ; வறக்குமேல் - பெய்யாமல் வறண்டு போனால்; வானோர்க்கும் - வானிலுள்ள தேவர்கட்கும் ; சிறப்பொடு - விழாவோடு; பூசனை - வழிபாடு ; செல்லாது - நிகழாது.

மழை பெய்யாமல் வறண்டுபோனால் வானுலகத் தேவர்கட்கு உலக மக்களால் செய்யப்பெறும் விழாக்கள் நடைபெறாதது மட்டுமில்லாமல் வழிபாடும் நிகழாது. வானோர்க்குச் செய்யும் வழிபாடே நிகழாதென்றால் பிற விழாக்களும் நிகழாது என்பது பொருள்.

வானோர்க்கும் - உயர்வு சிறப்பு உம்மை

**9. தானம் தவம் இரண்டும் தங்கா வியனுலகம்**
**வானம் வழங்காது எனின்**

தானம் - பிறர்க்குப் பொருளைக் கொடுக்கும் செயல் ; தவம் - அப்பொருளைத் தேடுவதற்கான முயற்சி ; இரண்டும் - அவை இரண்டும்; தங்கா - நிலைபெறமாட்டா; உளவாகா ; வியன் உலகம் - பெரிய இவ்வுலகம் ; வானம் - மழை ; வழங்காது எனின் - பெய்யாவிட்டால்.

அகன்ற இவ்வுலகத்தின் கண் மழை பெய்யாது போனால் பிறர்க்குப் பொருளைக் கொடுத்துதவும் தானச் செயலும் அப்பொருளைத் தேடுவதற்கான முயற்சியும் என்ற இரண்டு மேன்மைக் குணங்களும் நிலைபெறமாட்டா.

தங்கா - எதிர்மறை வினைமுற்று.

**10. நீர்இன்று அமையாது உலகுஎனின் யார்யார்க்கும்**
**வான்இன்று அமையாது ஒழுக்கு**

நீர்இன்று - நீர்இல்லாமல்; அமையாது - அமைய மாட்டாது ; உலகு - உலக மக்களின் வாழ்க்கை ; எனின் - என்றால் ; யார்யார்க்கும் - எத்தகையோர்க்கும்; வான்இன்று - வான் இல்லாமல் ; அமையாது - முறையாக மாட்டாது; ஒழுக்கு - அம்மக்களின் வாழ்க்கை ஒழுக்கம்.

எத்தகையோராயினும் உலக மக்களின் வாழ்க்கை நீர் இல்லாமல் அமைய மாட்டாது. எனவே வான்மழை இல்லாமல் மக்களின் வாழ்க்கை ஒழுக்கமும் அமைய மாட்டாது. மழை இல்லைஎனில் வாழ்க்கையும் வாழ்க்கை ஒழுக்கமும் முறையாக நிகழாது.

8,9,10 குறள்களில் அறம், பொருள், இன்பம் நிகழக் காரணம் கூறப் பெறுகிறது.

உலகு - ஆகுபெயர் ; யார்யார்க்கும் - முற்றும்மை ; ஒழுக்கு - தொழிற்பெயர்.

*(தொடரும்....)*

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

**(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)**

காஞ்சி நகரில் தொடங்கி அங்குள்ள கச்சி ஏகம்பனை வழிபட்டுத் துதித்துப் பின் பல பதிகளையும் போற்றிப் பாடி வருகிறார் பட்டினத்தார். அதன் பிறகு சிவப்பதிகளின் தலைமைப் பதியான தில்லை என்றும் சிதம்பரம் என்றும் அழைக்கப்படுவதான கோவிலைப் பாடுகிறார்.

அதன்பின் இறைவன் மாதொரு பாகனாகக் காட்சி தரும் திருச்செங்கோடு என்ற திருத்தலத்தைப் பாடத் தொடங்குகிறார். அவருடைய எண்ணமெல்லாம் வீடுபேறு அடைய வேண்டும் என்பேத. ஆனால் அது நம்கையில் இல்லையே. சிவன் சித்தம் எப்படியோ அப்படித்தான் நடக்கும் என்பதில் மாறாத உறுதி கொண்டவராய் உள்ளார் என்பதே அவர் பாடல்களின் அடிநாதமாக ஒலிக்கின்றது.

சிவன் நெருப்பான மேனி உடையவன். திருச்செங்கோட்டில் ஆத்தி மர நிழலின் அடியில் இருப்பவன். அவன் திருவுள்ளம் என்ன நினைக்கின்றதோ அறியேன். இன்னும் எத்தனை தடவை என்னைத் தாயின் கருக்குழியில் விழச் செய்யுமோ ? அல்லது அந்த முக்கண்ணன் தன்திருப்பாதத்தை எனக்குக் காட்டுமோ? எல்லாம் இறைவன் திருச்செயலே அது எனக்குத் தெரியவில்லை.

### திருச்செங்கோடு

***நெருப்பான மேனியர் செங்கோட்டில் ஆத்தி நிழல் அருகே***
***இருப்பார் திருவுருவம் எப்படியோ இன்னம் என்னை அன்னைக்***
***கருப்பசா யக்குழிக்கே தள்ளுமோ கண்ணன்காண் அரிய***
***திருப்பாத மேதருமோ? தெரியா(து) அவன்செயலே.***

### திருவொற்றியூர்

அடுத்துத் தனக்கு முத்தித் தலமாக வர இருக்கின்ற திருவொற்றியூரைப் பாட வேண்டும் என்ற நினைவு வந்து பாடுகிறார். அவருடைய வாழ்வில் அதிக முக்கியத்துவம் பெற்ற தலம் திருவொற்றியூர். அன்னை வடிவுடைய நாயகி அவரை ஆட்கொண்ட

திருப்பதி. பசியால் வாடிய இரவில் அவர் முன்னே அவரது தமக்கையாகத் தோன்றி அன்னை வடிவுடையாள் அவருக்கு அன்னமிட்ட தலம். பட்டினத்தார் வாழ்வில் முக்கியமான இடம் பெற்ற தலம். அதனால் அத்தலத்தை அவர் விரிவாகப் பாடத் தொடங்குகிறார். அவருடைய எண்ணமெல்லாம் நிலையாமையைப் பற்றியே சிந்திக்கின்றது.

இறுதி வரும்போது உயிர்களுக்கு உண்டாகும் மரணபயம் பற்றிச் சிந்திக்கின்றார். வாத பித்த சிலேட்டும நாடிகளில் ஒன்றான சிலேட்டுமம் என்று சொல்லப் பெறுகின்ற சளி நாடி தொண்டைக்கு மேலும் கீழுமாக இழுக்கத் தொடங்கும். அந்த நேரம் கண்கள் செருகிக் கொள்ளும்.

அப்போது கொள்ளும் அறிவழிந்து மெய்யுடல் பொய்யுடல் ஆகிய போதில் இறைவா ! உன்னிடம் ஒன்று வேண்டுகிறேன். எனக்குத் திருநீறும் இட்டு என்னுடைய கைகளையும் தொழுமாறு செய்து உதவி எனக்குக் கற்பிக்க வேண்டும்.

*ஐயும் தொடர்ந்து விழியும் செருகி அறிவழிந்து*
*மெய்யும்பொய் ஆகி விடுகின்ற போதொன்று வேண்டுவன்யான்*
*செய்யும்திரு வொற்றியூர் உடையீர் ! திரு நீறும்இட்டுக்*
*கையும் தொழப்பண்ணி ஐந்தெழுத்(து) உதவவும் கற்பியுமே*

என்று பாடுகிறார். உயிரிழந்த உடல் தான் சுடப்படுவதை அறியார். அவர்கள் வாழும் போது முப்புரம் எரித்த பிரான் பெரிய மதில் சூழ்ந்த தென்னாட்டு ஒற்றியூரன் ஊராகிய அவ்வொற்றியூரனின் தெருப்பரப்பில் நடப்பவர் பொற்பாதம் தன்தலைமேல் பட மனமே நீ உருண்டு புரள வேண்டும். இதன் மூலம் நாம் நம்முடைய விதி ஏட்டைக் கிழிக்கின்ற வழியாகும். இதனைப் பற்றிய பாடல்

*சுடப்படு வார்அறி யார்புரம் மூன்றையும் சுட்டபிரான்*
*திடப்படு மாமதில் தென்ஒற்றி ஊரன் தெருப்பரப்பில்*
*நடப்பவர் பொற்பாதம் தம்தலை மேற்பட நன்(கு)உருண்டு*
*கிடப்பது காண்மன மேவிதி ஏட்டைக் கிழிப்பதுவே.*

அடுத்த திருத்தலம் பட்டினத்தடிகளின் வாழ்க்கையில்

பத்திரகிரியார் என்ற ஞானியை அறிமுகப்படுத்திய இடம். இடைமருதூர் உறையும் எந்தாய் போற்றி என்று மாணிக்க வாசகரால் போற்றப்பட்ட திருத்தலம். திருவிடைமருதூர்.

காட்டில் திரிந்து என்ன பயன் ? காற்றையே உணவாக உண்டு என்ன பயன் ? ஓட்டை எடுத்து என்ன பயன் ? உள்ளன்பு இல்லாத அடியர் மேலும் தேவர்கள் நாடாக விளங்கும் இடைமருது இறைவனுக்கு மெய் அன்பு இல்லாதவர் மெய்ஞ்ஞானம் மேவினால் அவர் வீட்டின்பத்தை அடைவர்.

*காடே திரிந்(து)என்ன? காற்றே புசித்(து)என்ன? கந்தைசுற்றி*
*ஓடே எடுத்(து)என்ன உள்ளன்(பு) இலாதவர் ஓங்குவிண்ணோர்*
*நாடே இடைமரு(து) ஈசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்*
*வீடே இருப்பினும் மெய்ஞ்ஞான வீட்(டு)இன்பம் மேவுவரே.*

தாயும் பகையானாள் கட்டிக் கொண்ட மனைவியும் பகையானாள். தான் பெற்ற பிள்ளையும் பகை. உறவினரும் பகை. இவ்வுலகமே பகை. நாம் ஆராய்ந்து பார்க்கும் போது நம்மிடமுள்ள அரிய செல்வம் நீங்கினால் இல்லாமை வரும். இவையெல்லாம் நாம் மருதீசர் பொற்பாதத்தை அடைந்தமையால் வந்த பயன் என்று உணருங்கள். இதோ பாடல்.

*தாயும் பகைகொண்ட பெண்ணும் பெரும்பகை தன்னுடைய*
*சேயும் பகைஉற வோரும்பகை இச்செக மும்பகை*
*ஆயும் பொழுதில் அருஞ்செல்வம் நீங்கினஇங்(கு) ஆதலினால்*
*தோயும்நெஞ் சேமரு தீசர்பொற் பாதம் சுதந்தரமே*

**திருக்கழுக்குன்றம்**

கழுகுருவில் வந்த முனிவர்களுக்கு முத்தி வழங்கிய இடம் காடு. செடி கடல்புறம் நாடு நடுநகர் வீடு திண்ணைப்புறம் இவற்றில் எங்கேனும் விழுந்து கிடக்குமோ ? திருக்கழுக்குன்றில் இருக்கின்ற ஈசனே உன்பாதம் தான் எனக்கு உயிர்த்துணை.

*காடோ செடியோ? கடல்புறமோ ? கனமேமிகுந்த*
*நாடோ நகரோ? நகர்நடுவோ? தவமேமிகுந்த*
*வீடோ புறத்திண்ணையோ? தமியேன் உடல்விழுமிடம்*
*நீள்தோய் கழுக்குன்றில் ஈசா உயிர்த்துணை நின்பதமே*

வேடுவன் திண்ணனைக் கண்ணப்பன் ஆக்கிய சிவபெருமான் உறைகின்ற காற்றுத் தலமான திருக்காளத்தி இறைவனைத் துதிக்கத் தொடங்குகின்றார்.

பத்துத் திங்கள் தாய் வயிறு நுழைந்து பின் பிறந்து வளர்ந்து பட்டாடை சுற்றி முத்தும் பவளமும் அணிந்து ஆடி ஓடி முடிந்தபின் செத்துக் கிடக்கும் பிணத்தருகே இனிமேல் சாக இருக்கின்ற பிணங்கள் கத்துகின்ற கணக்கு என்ன ? சொல்வாய் காளத்தி இறைவனே !

*பத்தும் புகுந்து பிறந்து வளர்ந்து பட்டாடை சுற்றி*
*முத்தும் பவளமும் பூண்(டு)ஓடி ஆடி முடிந்தபின்பு*
*செத்துக் கிடக்கும் பிணத்தரு கேஇனிச் சாம்பிணங்கள்*
*கத்தும் கணக்(கு)என்ன காண்கரியிலாபுரிக் காளத்தியே*

பொன்னால் உண்டாகும் பயன் அப்பொன் பெற்றோர்க்கே உண்டு. பொன்படைத்தவனால் பொன்னுக்கு உண்டாகும் பயன்தான் யாது ? இறைவனே ! உன்னால் உண்டாகும் பயன் வேண்டுவன யாவும் கிடைப்பதே. ஆனால் உனக்கு என்னால் யாது பயன் ?

*பொன்னால் பிரயோசனம் பொன்படைத் தார்க்(கு)உண்டு பொன்படைத்தோன்*
*தன்னால் பிரயோசனம் பொன்னுக்(கு) அங்(கு)ஏ(து)உண்டு அத்தன்மையைபோல்*
*உன்னால் பிரயோசனம் வேண(து)எல்லாம் உண்(டு) உனைப்பணியும்*
*என்னால் பிரயோசனம் ஏ(து)உண்டு? காளத்தி ஈச்சுரனே !*

இங்கே பட்டினத்தடிகள் பெரிய.புராணம் கூறும் செயற்கரிய செய்த சிறந்த அடியவர்களைப் பற்றிச் சிறப்பித்துப் பாடுகிறார். அவர்கள் திரு

நீலகண்டர் கண்ணப்பர் சிறுத்தொண்டர் ஆகியோரே. பரமாதரைச் சார்ந்தார் எனக்கருதி அவரை நோக்கி எம்மைத் தீண்டுவீராயின் என்று திருநீல கண்டத்தை ஆணை வைத்த மனைவிக்காக எப்பெண்களையும் மனத்தால் கூடத் தீண்டாத திருநீலகண்டர். சிவனடியார் பசி தீர்க்கத் தன்மகன் சீராளனையே உணவாக்கிட மகவரிந்த சிறுத்தொண்டர். ஆறே நாள்களில் இறைவன்மேல் பற்றுக் கொண்டு தம் கண்ணைத் தோண்டி அப்பிய கண்ணப்பர் ஆகிய இவர்களைப் போல நான் திருக்காளத்தி அப்பனுக்கு எப்படி அடியவனாவேன் ? என்கிறார்.

*(தொடரும்...)*

## பொறாமை தவிர்க

(ம. கார்மேகம்)

மனிதன் பிறக்கும் போது நல்ல குணங்களைக் கொண்டவனாகத்தான் பிறக்கிறான். அவன் வளர வளரத் தீய குணங்கள் அவனிடத்தில் எளிதாக ஒட்டிக் கொள்கின்றன. இந்தத் தீய குணங்களிலிருந்து விடுபட்டுத் தன்னைக் காத்துக் கொள்கிறவனே உயர்ந்த நிலையை அடைகின்றான். ஆனால் நம்மில் பலர் இவற்றலிருந்து விடுபடவே நினைப்பதில்லை.

பேராசை, கோபம், கடுஞ்சொல் கூறுதல், பொறாமை, வெறுப்பு என்பன போன்றவற்றில் ஏதாவது ஒரு குணம் மனிதனிடம் குடிகொண்டுவிடுகிறது. வெறுப்பினால் நட்பும் உறவும் நீடிப்பதில்லை. கடுஞ்சொல்லால் பகைமை வளர்கிறது. கோபத்தால் ஆபத்து விளைகிறது. பேராசையால் பிறருக்கு அழிவைத் தேடவும் வழி கிடைக்கிறது. பொறாமையால் ஒரு மனிதன் தன்னையும் அழித்துப் பிறரையும் கெடுக்க முனைகிறான். இவையனைத்தும் இல்லாமல் மனம் தூய்மையாக இருப்பதே அறம் என்கிறார் வள்ளுவர்.

மனத்துக்கண் மாசில்லாமலும், அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச் சொல், இல்லாமனும் வாழ்வதே அறம் என்கிறார். ஒருவருடைய வளர்ச்சி கண்டு பொறாமை கொள்கின்ற உள்ளம்

பலரிடத்தில் காணப்படுகிறது. ஒருவருடைய வளர்ச்சிக்குப் போட்டி தேவையே தவிர பொறாமை உணர்வு கூடாது. பொறாமை கொண்டவன் ஆக்கம் பெறுவதில்லை: ஒழுக்கம் இல்லாதவன் உயர்வடைவதில்லை என்பார் திருவள்ளுவர்.

இன்றைக்கு எங்கு நோக்கினாலும் பொறாமை உணர்வு மேலோங்கி இருப்பதால்தான் பூசல்கள் மலிந்துவிட்டன. கல்வியில், பணிகளில், பதவிகளில், செல்வத்தில், தொழில் நிறுவனங்களில் என்று எல்லா நிலைகளிலும் பொறாமை கொண்டவர்கள் மிகுதியாகிவிட்டனர். குடும்ப உறவுகளிலே கூடப் பொறாமை உணர்வு மேலோங்கியதால் தான் உறவுகளில் விரிசல் உண்டாகிறது.

ஓட்டப் பந்தயத்தில் முதலில் வந்து கொண்டிருப்பவனை வெல்ல வேண்டும் என்ற முயற்சியில் போட்டி வேண்டும். முதலில் வருபவன் மீது பொறாமை கொண்டு அவன் வந்து விடாமல் செய்ய அவன் காலை இடறினால் முதலில் வந்தவனும் வீழ்வான், இடறியவனும் வீழ்வான் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

ஒருவன் தான் மட்டுமே படித்து முன்னேற வேண்டும் என்று எண்ணாமல் எல்லோரும் படித்து முன்னேற வேண்டும் என நினைத்தால் அவன் உயர்கிறான். பிறரைக் கெடுத்துத் தான் முன்னேற வேண்டும் என்று கருதும் சுயநலப் பிறவிகள் தான் பொறாமை கொள்கின்றனர்.

ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகளாய் இருந்தாலும் ஒருவர் வளர்ச்சியை மற்றொருவர் பொறுத்துக் கொள்ள முடியாமல் பொறாமை கொள்வதும் பகைமை வளர்ப்பதும் அதிகமாகி விட்டது. வளர்ச்சியைப் பாராட்டி அதன்வழி உறவுகளில் பிரிவு ஏற்படுகிறது. இதனால் பொறாமை கொண்டவர் தானும் குமைந்து பிறருக்கும் நன்மையில்லாமல் போவதைக் காணலாம்.பண்டிகை நாட்களில் நலம் விசாரித்துப் பண்டங்களைப் பரிமாறிக் கொண்ட காலமெல்லாம் போய்விட்டது. தனித் தனியாய் வீட்டுக்குள் பண்டிகை கொண்டாடுகின்ற நிலைக்குச் சமூகம் தள்ளப்பட்டு விட்டது.

தான் வாழ்ந்து பிறரும் வாழ வேண்டும் என்ற நல்ல எண்ணம் இருந்தால் பொறாமை தோன்றாது. தன்னுடைய முயற்சியாலும், உழைப்பாலும் ஆற்றலாலும் ஒருவன் மேலேறி வருகின்ற போது அவன் முயற்சியைப் பாராட்டாமல் கீழே தள்ளிவிடும் செயல்தான் பொறாமை. ஒருவருடைய வளர்ச்சி கண்டு பொறாமை கொள்கின்ற உணர்வுகள் மிகுதியாகி விட்டதால் மகிழ்ச்சியைக் கூடப் பகிர்ந்து கொள்ள முடியவில்லை.

பொறாமை உணர்வினால்தான் குற்றங்கள் மலிந்து விட்டன. என்ன செய்தாவது, வளர்கின்றவனை வாழவிடாமல் செய்யத் துணிகின்றனர். நீதிமன்றங்களுக்கு அலைபவர்களும், கைகலப்புச் செய்து கொள்பவர்களும், பழிசொல்லித் திரிவோரும் ஏராளம்! மேலே கூறிய செயல்கள் வெற்றிபெற இயலவில்லை என்றால் வினைகளும், சூதும் செய்யத் தலைப்படுகின்றனர்.

இத்தகைய சூதும் வாதும் வேதனை செய்யும் என்பதையும் தன்வினை தன்னைச் சுடும் என்பதையும் அறிந்து கொள்ளாமல் பொறாமைத் தீயை மேலும் மேலும் வளர்த்துக் கொள்கின்றனர்.

பாண்டவரின் வீரத்தையும், பெருமையையும் பொறுத்துக் கொள்ள முடியாமல் பொறாமை கொண்ட துரியோதனன் நிலையைப் படித்தவர்கள் கூடப் பொறாமை கொண்டு அலைகின்றனர். பாண்டவர்களை அழிக்கப் பலவகையில் முயன்றும் துரியோதனன் அனைத்திலும் தோல்வி கண்டான்.

பொறாமை கொண்டவன் வஞ்சகம் செய்பவன் என்பதால்தான் அழுக்காறு எனும் தன்மையைப் பாவி என்கிறார் வள்ளுவர். இந்தப்பாவி பொறாமை கொணடவனின் செல்வத்தையும் அழித்து அவனை நரகத்தில் சேர்க்கும் என்கிறார். எனவே பிறர் வளர்ச்சி கண்டு பொறாமைப் படாமல் தன் வளர்ச்சிக்கான முயற்சியை ஒவ்வொருவரும் மேற்கொள்ள வேண்டும். தன்னைக் காத்துக் கொள்ளவாவது ஒருவன் பொறாமைக் குணத்திலிருந்து விடுவித்துக் கொண்டால் வீடும், நாடும் சிறக்கும்.

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

## இந்திரன் பழி தீர்த்தது

வியாழ பகவானும் இந்திரா உன்னைப் பிடித்துள்ள இந்த பிரம்மஹத்தி தோஷம் நீங்கவேண்டிய இடம் பூலோகம்தான். வேட்டையாடுதலைக் காரணமாகக் கொண்டு, இந்தத் தோஷத்தைப் போக்கிக்கொள்ளும் பொருட்டுப் பூலோகத்திற்குச் செல்வாயாக என்றார். இந்திரன் தனது வெண்குதிரைமேல் ஏறிக் கொண்டான். அவனைச் சுற்றிக் குருவும் தேவர்களும் அன்புடன் சூழ்ந்து வந்தனர். பூமியிலே வந்து இறங்கினான். சிவபெருமான் வாழும் திருக்கைலாச மலையை அடைந்து வழிபட்டான். பின்னர் தெற்குத்திசை நோக்கிப் புறப்பட்டான். கங்கை முதலான பல புண்ணிய நதிகளில் நீராடி திருக்கேரதம்,காசி,காஞ்சிபுரம் என்னும் பல சிவ க்ஷேத்திரங்களைக் கண்டு வணங்கினான். இன்னமும், அவனைப்பிடித்த பிரம்மஹத்தி தோஷம் நீங்கினபாடில்லை. பொலிவு குறைந்து கொண்டே வந்தது. இறுதியாக கடம்பவனத்து எல்லையின் பக்கமாக வந்தவுடன் பிரம்மஹத்தி தோஷம் இந்திரனை விட்டுப் பிரிந்து சென்று ஓடிவிட்டது. பெரும் பாரம் இறங்கியவனைப்போல இந்திரன் மிகுந்த சந்தோஷம் அடைந்தான். குருவினிடம் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டான். உடனே வியாழபகவானும் இவ்விடத்தில் தான் உலகில் சிறந்த புண்ணிய ஸ்தலமும், புனித தீர்த்தமும் இருக்கின்றன. நாம் அவற்றைக் கண்டுகொள்ள வேண்டும் சென்று தெரிந்துவா என்று ஆணையிட்டார். தேட்டம் கொண்டு நாட்டமுற்ற தேவேந்திரன் கடம்பவனத்துக்குள் புகுந்தான். அந்த வனம் முழுவதுமே தெய்வமணம் கமழ்வதாக இருந்தது. குயில் பறவைகள் ஓம் ஓம் என்று கூவின. கிளிகளும் நமச்சிவாய சொல்லின. இந்திரன் உள்ளத்திலே பேருவகையும் பேரமைதியும் குடிகொண்டன. புளகாங்கிதம் அடைந்தான். இதற்கிடையே இந்திரனது தூதுவர்கள் வந்து சேர்ந்தனர். அவர்கள் வணங்கி மகிழ்ந்து வியந்து சொன்னார்கள், மன்னவரே ! நாங்கள் காணக்கிடைக்காத தெய்வத் தன்மையையும் இந்தக் கடம்பவனத்திலே கண்டுவந்தோம். புனிதமும் தூய்மையும் கொண்டு தீர்த்தக்

கரையிலே, கடம்பமரத்தின் நிழலிலே சிவலிங்கம் ஒன்றுள்ளது. அது ஒப்பற்றது. தானே முளைத்தெழுந்து, ஒளிமயமாக இருக்கிறது என்று.

ஒற்றர்களின் மூலமாக வந்த அமுதினும் இனிய வாக்கைக் கேட்ட இந்திரன் மகிழ்ச்சிக் கடலில் திளைத்தான். பக்தி மேலிட்டவனாய்த் தனது சிரமேல் கைகுவித்து, எல்லாம் ஒடுங்கியவனாகித் தனது தோஷம் விலகக் காரணமாக இருந்த சிவலிங்கத்தைக் கண்டுகளிக்க விரைந்து சென்றான். மூலகாரணமாகி முளைத் தெழுந்த சிவக் கொழுந்தைத் தன் ஆயிரங்கண்களாரக் கண்டான் இந்திரன். ஆடினான், பாடினான், ஆனந்தக் கூத்தாடினான் தேவேந்திரன். ஆனந்தக் கண்ணீர் சொரிந்தான். நா தழுதழுத்தது. உடல் நடுங்கியது. பக்திப் பரவசம் மேலிடப் பல துதிகள் இயம்பினான்.

பின்னர் சச்சிதானந்த சொரூபமாக விளங்கும் அன்புருவான சோமசுந்தரக் கடவுளுக்கு அருச்சனை செய்யும் பொருட்டு, சுவர்க்கலோக மலர்கள் கொண்டுவரச் சொல்லி சில தேவர்களை அனுப்பினான். அடுத்து இந்திரன் விசுவகர்மாவை அழைத்து விமானம் ஒன்று அமைக்குமாறு கட்டளையிட்டான், அருகில் இருந்த தாமரைக் குளத்திலே மலர்கள் பறிக்கச்சென்றான். விரைவில் அருச்சனை செய்யும் எண்ணத்தோடு.ஆனால் நல்லமலர்கள் கிடைக்கவில்லை. இந்திரன் ஏக்கம் கொண்டான் - தேவர்கோனின் மனச் சோர்வை உணர்ந்த சோமசுந்தரக் கடவுள் உடனே அருள் புரிந்தார். அந்தத் தடாகத்திலே பொன் தாமரை மலர்கள் பூத்துவிட்டன. இந்த அதிசயத்தைக் கண்ட இந்திரன் பக்தி மேலிடக் கூத்தாடினான். அந்தத் தீர்த்தத்திற்கு பொற்றாமரைக் குளம் என்று திருபெயரிட்டான். பொற்றாமரைத் தடாகத்தில் குளித்தெழுந்தான். பொற்றாமரை மலர்களைப் பறித்துக்கொண்டு சிவ சன்னிதானத்தை அடைந்தான்.

அச்சமயம் ஆகாயத்திலிருந்து ஒளிமயமான மாணிக்க விமானம் ஒன்று இறங்கிவந்தது. எட்டு யானைகள், முப்பத்திரண்டு சிங்கங்கள், அறுபத்து நான்கு சிவகணங்கள் தாங்குமாறு தேவதச்சனால்

படைக்கப்பட்ட விமானம்தான் அது. அந்த விமானத்தைச் சாத்திய பின்பு தேவேந்திரன் சோமசுந்தரக் கடவுளுக்குப் பூசைசெய்ய முற்பட்டான். அதே சமயத்தில் தேவலோகத்திலிருந்து பூசைக்கு வேண்டிய பொருள்களும் சோட சோபசாரப் பொருள்களும் வந்து சேர்ந்தன. மறுபடியும் இந்திரன் பொற்றாமரைத் தடாகத்தில் நீராடி, வெண்ணீறு தரித்து உருத்திராட்சமலை அணிந்து சிவாகமப்படிப் பெரும் பூசை செய்யலானார். பக்தி வெள்ளம் பெருகிப் பாயப் பரவசனான தேவேந்திரன் பல முறைகள் வணங்கி வணங்கிப் போற்றினான்.

இந்திரனது பூசனையை ஏற்று மகிழ்ந்த சோமசுந்தரக் கடவுளும் திருவருள்கொண்டு வெளிப்பட்டார். உனக்கு வேண்டுவது என்ன ? சொல் என்று திருவாய் மலர்ந்தருளினார். சிரசின்மேல் கைகூப்பியவனான இந்திரன் தேவரீரைப் பூசைசெய்யும் பாக்கியத்தைக் காட்டிலும், பெரும் பேறு வேறு உண்டோ? எப்பொழுதும் பூசைசெய்து கொண்டே யிருக்கும் தேவரீரது தொண்டனாக இருக்கவே விரும்புகிறேன் என்றான். இது கேட்ட சோமசுந்தரப் பெருமானும் கருணையுடன், அன்ப! ஒவ்வொரு சித்ரா பௌர்ணமியன்றும் வந்து பூசை செய்வாயாக; ஆண்டு முழுதும் செய்கின்ற பூசையின் பயனை அந்த ஒரு நாளிலேயே பெறுவாய். நீ தேவலோகம் சென்று பல இன்பங்களை அனுபவித்து வாழ்வாயாக யாம் உனக்கு மோட்சம் கிடைக்குமாறு உனக்குப் பக்குவம் வந்ததும் அருள்வோம் என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தார். பின்னர் தேவர் கோன் சிவபக்திச் செல்வனான தன்மையோடு பொன்னுலகம் சேர்ந்தான்.

## 2. வெள்ளை யானை சாபம் தீர்த்தது

புனிதமான கங்கை யாற்றங்கரையிலே புண்ணிய மான காசி என்ற க்ஷேத்திரத்திலே முன்பொருக்கால் துருவாச மகரிஷி சிவாகம முறைப்படி சிவலிங்கம் ஒன்றைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டார். சிவபெருமான் முனிவரின் பூசையில் மகிழ்ந்தவராகித் தனது திருமுடியிலிருந்து மணம் மிகுந்த பொன் தாமரை மலர் ஒன்றை விழுமாறு அருளினார். அம் மலரைத் துருவாச முனிவர் மிகுந்த பய

பக்தியுடன் தமது இரு கரங்களாலும் ஏந்திக் கண்களில் ஒற்றிக் கொண்டார். பெரு மகிழ்ச்சியோடு பொற்பூவுடன் தேவலோகம் சென்றார்.

துருவாசர் சுவர்க்கலோகம் சேர்ந்தபோது தேவேந்திரன் அசுரர்களைத் தொலைத்து வெற்றிச்சின்னங்களோடு திரும்பிக் கொண்டிருந்தான். நிரம்பக் கோலா கலத்துடனும், குதூகலத்துடனும் வந்துகொண்டிருந்தான். தேவர்கள் பலர் இந்திரன் அருகிலே வந்து காணிக்கைகள் பல கொடுத்தனர். இந்தக் காட்சியைக் கண்ட துருவாச முனிவரும் தன் கையிலிருந்த சில நிர்மால்யமான பொற்றாமரைமலரை ஆசிப் பொருளாகத் தந்தார். ஐசுவரிய கர்வம் பிடித்ததனாலே மதியமயங்கிய தேவேந்திரன் யானைமீது இருந்தபடியே அருமை தெரியாது ஒரு கையை நீட்டி வாங்கினான். வாங்கிய மலரின் புனிதத் தன்மையை அறியாதவன் தனது வெள்ளை யானையின் மத்தகத்தின்மேல் வைத்தான். ஆனால் அந்த ஐராவதம் தலையிலிருந்த அச்சிவ மலரைத் தனது துதிக்கையால் கீழே தள்ளித் தன் காலினால் மிதித்துச் சின்னாபின்னபப்படுத்தியது.

சிவநிர்மால்யம் அவமதிக்கப்பட்டதைக் கண்ட துருவாச மகரிஷிக்குத் தாங்கமுடியாத கோபங்கண்டது. உருத்திரக் கடவுளைப் போல நின்று ஆரவாரித்தார். அழியும் செல்வத்தால் கர்வம் பிடித்துத் திரியும் இந்திரா ! என்ன காரியம் செய்தாய். நீ? சிவபெருமான் திருமுடிமேல் இலங்கிய பூவைப் போற்றாது ஒரு கையால் வாங்கி அவமரியாதை செய்ததல்லாமல் யானையையும் கொண்டு சிதைக்க விட்டுவிட்டாயே ! நீ அனுபவிக்கும் செல்வமும் சிறப்பும் சிவபெருமான் அருளியவை என்பதை உணரவில்லையா? இந்திரனே ! உனது முடியானது பாண்டி வீரன் ஒருவனது திகிரியால் சிதறக் கடவது; உனது பட்டத்து வெள்ளை யானையும் காட்டானையாகக் கடவது என்று சாபம் தந்து விட்டார்.

தங்கள் தலைவன் அடைந்த சாபத்தைக் கேட்ட தேவர்கள் அஞ்சி நடுநடுங்கினார்கள். எல்லாம் துருவாசரின் காலடியில் விழுந்து

வணங்கி சாபத்தை நீக்கியருளுமாறு வேண்டினர். கோபம் தணியப்பெற்ற துருவாசரும் மனம் இரங்கினார். சிவா அபசாரம் பரிகாரத்தால் போகாது. ஆகையால் இந்திரனது தலைக்கு வரும் ஆபத்து முடியளவோடு சென்றுவிடக் கடவது; வெள்ளை யானை காட்டானையாகி நூறு ஆண்டுகள் திரிந்து கொண்டிருந்து பின்னர் தனது பழைய நிலையை அடையக் கடவது என்று தனது சாபத்தை மாற்றி அருளினார் துருவாசர். சாபம் பெற்ற வெண்ணிற யானை வானுலகை விட்டு இழிந்தது. அதனுடைய அறிவு நீங்கியது. பூவுலகிற்கு வந்து இறங்கியது. கருநிறங் கொண்டு காட்டானைகளோடு தானும் ஒரு எளிய யானையாகி விட்டது.

யானைக் கூட்டத்தோடு சேர்ந்து தானும் பலப்பல இடங்களில் திரியலாயிற்று. இப்படியாக அது ஒருவாறாக நூறாண்டுகளையும் கழித்துவிட்டது. பின்னர் ஒரு தினம் அந்த யானை தெய்வத்தன்மை நிரம்பிய கடம்ப வனத்துக்குள் எதேச்சையாக நுழைந்து விட்டது. சிவபெருமானின் திருவருள் பெறுகின்ற காலம் வந்துவிட்டதல்லவா? அங்கு சுற்றித் திரிந்த யானை பொற்றாமரைப் பொய்கையையும் கண்டது. அதனைக் கண்ட மாத்திரத்தில் முன்னைய அறிவு தோன்றியது. பொற்றாமரைக் குளத்தில் நீராடியது. அதன் பயனாகக் காட்டானை வடிவு நீங்கக் கருநிறமும் ஒழிந்தது. வெண்ணிறமுற்ற தெய்வ யானையாகிப் பழைய பொலிவுடன் துலங்கியது. அப்போது அதன்முன் சொக்கலிங்கப் பெருமான் தோன்றினார். யானை அவரைக் கண்டு வணங்கி வழிபட்டது. அப்பெருமானுக்குப் பூசை செய்யும் ஆவல் மிகுந்தது. தனது துதிக்கையிலே பொற்றாமரைத் திருக்குள நன்னீரை முகந்து கொணர்ந்து சிவலிங்கத்துக்கு அபிஷேகம் செய்தது. மலர் ஆட்டிப் பூசை செய்தது.

ஐராவதத்தின் பக்தி விசேஷத்தை உணர்ந்த பரமன், நீ வேண்டும் வரம் எது? என்றார். நல்லுணர்வு பெற்ற தேவயானை வணங்கித் தனக்கு முன்பு நிகழ்ந்தது அனைத்தையும் கூறிவிட்டு. தேவரீரது திரு விமானத்தைத் தாங்கும் எட்டு யானைகளோடு என்னையும் சேர்த்துக் கூட்ட வேண்டும். எம்பெருமானைச் சுமக்கும் பேரருள் எளியேனுக்கும்

கிட்ட வேண்டும். அருள் புரியவேண்டும் என்று இறைஞ்சியது. அருளுருவமான சோமசுந்தரப் பெருமான் கடைக்கணித்தார். தேவேந்திரன் எமது பக்தன் ஆகையால், அவனை நீ சுமந்திருப்பதே எமக்குப் பேருவகை தரும் செயலாகும் என்று இயம்பிப் பலவரங்கள் ஈந்து மறைந்தருளினார்.

பின்னர் வெள்ளை யானையும் திருவருள் திறத்தை எண்ணி வியந்தவாறு சென்று, சொக்கலிங்கமூர்த்தியின் மேற்குத் திக்கை யடைந்தது. அங்கே ஐராவத தீர்த்தம் உண்டாக்கி அதன்கரையிலே ஐராவதேசுவரர் என்னும் சிவலிங்கத்தையும், ஐராவதகணேசர் என்ற விநாயக மூர்த்தியையும் பிரதிஷ்டை செய்து பக்தி யோடு பூசை புரிந்து வந்தது. தனது யானையின் நிலைமையைக் கேள்விப்பட்ட தேவேந்திரன் தனது பணியாளரைக் கூப்பிட்டு அதனை அழைத்து வரச்செய்தான். பணியாளரைக் கண்ட ஐராவதமும் தான் பின்னே வருவதாகச் சொல்லி அவர்களை முன்னே போகச்சொல்லியது. அவர்கள் சென்றதும் சொக்கலிங்க மூர்த்திக்குக் கிழக்குத் திக்கிலே சென்றது. ஆங்கே ஐராவதுபுரம் என்று ஓர் ஊரை அமைத்து, தனது தலைவனது பெயரால் இந்திரேசுவரர் என்ற சிலிங்கத்தையும் பிரதிஷ்டை செய்து பூசை செய்து வந்தது. இன்னமும் தனது யானை வராதது கண்ட இந்திரன் தனது ஏவலாளர்களை விரைவுடன் அனுப்பி வைத்தான். பின்னர் காலம் வந்ததை உணர்ந்து, அந்த தேவப் பணியாளர்களோடு வெள்ளை யானையும் தேவலோகம் சென்றது.

சுவர்க்க லோகத்திலே தனது தலைவனைக் கண்டு மகிழ்ந்து வணங்கி தான் பன்னெடுங்காலம் பட்ட இன்னல்களையும், சோமசுந்தரப் பெருமானைத் தரிசனம் செய்து தனது கடுஞ்சாபத்தைப் போக்கிக் கொண்டதையும் சொல்லி இனிதே அமைந்திருந்தது.

*(ஆதாரம் : புலவர் மணி எழுதிய திருவிளையாடற்புராணம் வசனம்)*

*(தொடரும்...)*

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்